**இறைமாட்சி:**

- இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
  வகுத்தலும் வல்ல தரசு.
- படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
  உடையான் அரசருள் ஏறு.
- அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
  எஞ்சாமை வேந்தற் கியல்பு
- தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
  நீங்கா நிலனாள் பவற்கு
- காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
  மீக்கூறும் மன்னன் நிலம்.
- முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
  இறையென்று வைக்கப் படும்.
- செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
  கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

**கல்வி:**

- கற்க கசடறக் கற்பவை கற்றபின்
  நிற்க அதற்குத் தக.
- கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
  புண்ணுடையர் கல்லா தவர்.
- உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
  அனைத்தே புலவர் தொழில்
- தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
  கற்றனைத் தூறும் அறிவு.
- யாதானும் நாடாமா லூராமா லென்னொருவன்
  சாந்துணையுங் கல்லாத வாறு.
- தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
  காமுறுவர் கற்றறிந் தார்.

**கல்லாமை:**

- அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
  நூலின்றிக் கோட்டி கொளல்.
- கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
  இல்லாதாள் பெண்காமுற் றற்று.
- விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
  கற்றாரோ டேனை யவர்.

**கேள்வி:**

- செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வஞ்
  செல்வத்து ளெல்லாந் தலை.
- செவிக்குண வில்லாத போழ்து சிறிது
  வயிற்றுக்கும் ஈயப் படும்.
- செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
  ஆன்றாரோ டொப்பர் நிலத்து.

**அறிவுடைமை:**

- எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
  மெய்ப்பொருள் காண்ப தறிவு.
- எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
  அவ்வ துறைவ தறிவு.
- அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
  தஞ்ச லறிவார் தொழில்.
- அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார்
  என்னுடைய ரேனு மிலர்.

**குற்றங்கடிதல்:**

- செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
  பெருக்கம் பெருமித நீர்த்து.
- தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
  கொள்வர் பழிநாணு வார்.
- வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
  வைத்தூறு போலக் கெடும்.
- தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்
  என்குற்ற மாகு மிறைக்கு.
- வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
  நன்றி பயவா வினை.

**பெரியாரைத் துணைக்கோடல்:**

- அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
  திறனறிந்து தேர்ந்து கொளல்.
- அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
  பேணித் தமராக் கொளல்.
- இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
  கெடுக்குந் தகைமை யவர்.
- இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
  கெடுப்பா ரிலானுங் கெடும்
- முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
  சார்பிலார்க் கில்லை நிலை.

**சிற்றினஞ் சேராமை:**

- சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
  சுற்றமாச் சூழ்ந்து விடும்.
- மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம்
  இன்னா னெனப்படுஞ் சொல்.
- மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
  இனந்தூய்மை தூவா வரும்.

**தெரிந்து செயல்வகை:**

- தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
  அரும்பொருள் யாதொன்றும் இல்.
- ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
  ஊக்கா ரறிவுடை யார்.
- எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
  எண்ணுவ மென்ப திழுக்கு.
- எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
  கொள்ளாத கொள்ளா துலகு.

**வலியறிதல்:**

- வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியுந்
  துணைவலியுந் தூக்கிச் செயல்
- பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
  சால மிகுத்துப் பெயின்.
- நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
  உயிர்க்கிறுதி யாகி விடும்.
- அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
  இல்லாகித் தோன்றாக் கெடும்.

- நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
  உயிர்க்கிறுதி யாகி விடும்.